உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்,

சமரசவேத சன்மார்க்க சங்கத்தார்

# பொய்யுரைவிளக்கம்.

இஃது

தேவிகோட்டை

மீனலோசனி யந்திரசாலையில்

அச்சிற்பதிப்பிக்கப்பட்டது.

விசுவாவசுளு வைகாசிமீ.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## சமரசவேத சன்மார்க்க சங்கத்தார்

# பொய்யுரைவிளக்கம்.

சங்கத்தாரே!

நீவிர் வெளிப்படுத்திய "ஈழநாட்டார் பகட்டுரை மறுப்பு" "திருவருட்பா விளக்கம்" என்னும் பத்திரிகைகளை யாங்கண்டனம். அவைகள், தேவாரமுதலியபன்னிருதிருமுறைகளையும், தில்லைவாழந்தணர்களையும், பொருள் காரணமாகவேனும், அச்சங்காரணமாகவேனும், தம்மைச் சார்ந்தாரன்புகாரணமாகவேனும் முறைபிறழாமற் சைவசமயத்துண்மையைப் போதித்துத்தம்வாழ்நாண் முழுதையும் அச்சமயவிருத்தியின்பொருட்டே செலவழித்த நாவலரவர்களையும், எம்மையும், பிறரையும் தூஷித்தற்கெழுந்தனவென்பதை அவற்றைவாசிப்போர் நன்குணர்வர். அதுநிற்க.

நும் பத்திரிகைகளில் யாம் முக்கியமாய்க் கவனிக்க வேண்டிய விஷயங்கள் சிலவற்றைமாத்திரங் கவனித்து

அநுவதித்துங் கருத்தை எடுத்துக்காட்டியும் அவை குற்ற முடைத்தாமாற்றைப் புலப்படுத்தி நுமது பொய்யை வெ ளிப்படுத்துகின்றும்,

"அப்பன்னிரு திருமுறைகளை வகுத்த அபயகுலசேக ரசோழனுலாவது, நம்பியாண்டார் நம்பிகளாலாவது, உமா பதிசிவத்தாலாவது, அல்லது வேறு எந்தப் பண்டையாசிரி யர்களாலாவது அப்பன்னிரு திருமுறைகளின் றலைப்பில் "திரு வருட்பா" வெனப் பொறிக்கப்பட்டுளதா? இல்லையே. அங்ஙனமுண்டாயிருப்பின் எந்தப்பழைய ஏட்டுப்பிரதிக ளிலாவது அல்லது இதுவரையில் அச்சிட்டுள்ள அச்சுப்பிர திகளிலாவது எடுத்துக்காட்டுவாராக." என்றீர்.

அருட்பாவாதற்குக் காரணம் ஏட்டின்றலைப்பில் அப் பெயர்பொறிக்கப்பட்டிருத்தருேனே? ஆமெனில், கிறீஸ்தவ ர்கள் வேதாகமமாகாத பைபிலின் றலைப்பின் வேதாகமமெ ன்று பதிப்பித்துவிட்டபடியால், அதனை வேதாகமமென்று அங்கீகரித்தல்வேண்டுமே. அறிஞர் அங்ஙனம் அங்கீகரிப் பாரா? அங்கீகரியாதபோது அவர்மீதும் நீவிர் இல்லாத குறைகளைவரைந்து தூஷிப்பீர்கள்போலும்.

நீவிர் எடுத்துக்காட்டிய "திருநெறித்தமிழ்" "திருமறை த்தமிழ்" என்பன எந்த ஏட்டுப்பிரதியின் றலைப்பிலாவது அப்பெரியோர்களாற் பொறிக்கப்பட்டுள்ளனவா? இல்லையே.

அவர்களாற் பொறிக்கப்படாத பெயர்களை நீவிர் கைக்கொண்டதென்னையோ?

தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு. திருமந்திரம், திருமுகப்பாசுரம், திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம், திருவிரட்டைமணிமாலை, அற்புதத்திருவந்தாதி, திருவெண்பா, பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர்மும்மணிக்கோவை, திருக்கைலாயஞானவுலா, கைலைபாதிகாளத்திபாதியந்தாதி, திருவீங்கோய்மலையெழுபது, திருவலஞ்சுழிமும்மணிக்கோவை, திருவெழுகூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றித்திருவகவல், திருமுருகாற்றுப்படை, திருக்கண்ணப்பதேவர்திருமறம், திருக்கண்ணப்பதேவர்திருமறம், மூத்தநாயனார்திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான்றிருவிரட்டைமணிமாலை, சிவபெருமான்றிருவந்தாதி, சிவபெருமான்றிருவந்தாதி, சிவபெருமான்றிருமும்மணிக்கோவை, மூத்தபிள்ளையார்திருமும்மணிக்கோவை, கோயினன்மணிமாலை, திருக்கழுமலமும்மணிக்கோவை, திருவிடைமருதூர்மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர்த்தொகை, திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார்திருவிரட்டைமணிமாலை, கோயிற்பண்ணியர்விருத்தம், திருத்தொண்டர்திருவந்தாதி, ஆளுடையபிள்ளையார்திருவந்தாதி, திருச்சண்பைவிருத்தம், திருமும்

மணிக்கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை, திருநாவுக்கரசுதேவர்திருவேகாதசமாலை, பெரியபுராணம் என்றுதானே அவ்வவற்றின் றலைப்பிற் பெயர்பொறிக்கப்பட்டுள்ளன. அங்ஙனமாகவும், அவற்றைத் திருமுறையெனக்கூறுதலை நீவிர் மறுக்கப்புகாததென்னையோ?

மலமுத்தர்கள், அருளினாற்பாடியபா, அருளைவிளக்கப் பாடியபா, அருணுதவொலியாகப்பாடியபா, அவர்கள்வாக்கிற் சிவபிரான் கலந்திருந்து பாடியபா, அப்பெருமான் பாடுக வென்று ஆஞ்ஞாபித்துப்பாடப்பட்டபா, அப்பெருமான் றமது அருமைத்திருக் கரத்தாலெழுதியபா அருட்பாவாகாதாம். மலபெத்தராகிய இராமலிங்கபிள்ளையவர்கள் முக்குணவயத்தான் முறைமறந்தறைந்தபா அருட்பாவாதற் கிழுக்கில்லையாம். "கண்டனமின்றியாங் கவிபின்வண்ணமே."

"பின்னும் இந்நூதனசைவர் திருமுறையென்பது தேவாரதிருவாசகாதி திருமுறைகட்கே உரியதன்றி இராமலிங்கசுவாமிகளின் திருவருட்பாவிற்கு அடாதெனக் கூறுகின்றார்; இதனால் இவர்கற்ற கல்வித்திறம் இத்தகையதென விளங்குகின்றது. முன்னர் முறையென்பதற்குப் பொருளென்னையோ? சம்பந்தசுவாமிகள் திருமுறை மூன்று என்றால் என்னை? 3-வகுப்பு, பிரிவு, புத்தகம் என்பார்கள். இதை ஆங்கிலேயத்தில் வால்யம் என்பார்கள். இம்மூவர் பாடலும் அடங்கிய புத்தகத்துக்குத் தேவார அடங்கன்

முறையென்பார்கள். இவ்விராமலிங்கசுவாமிகள் பாடலுக்கு த்திருமுறையெனக் கூறுவதனால் வருங்குற்றமென்னையோ'' என்றீர்.

தேவாரமுதலிய திருமுறைகள் திருவருட்பா அல்ல வென்றும் இராமலிங்கபிள்ளையவர்கள்பாடல் திருவருட்பா வென்றும் சிவத்துரோகத்துக்குச் சிறிதுமஞ்சாது கூறுகின்ற நுமக்கு அவர்பாடலைத் திருமுறையெனக் கூறுதல்குற்றமெனப் புலப்படுமாறு யாங்ஙனம்? முறையென்பதற்கு வகுப்பு, பிரிவு, புத்தகம், இங்கிலிஷில் வால்யம் என்னும் பொருள்களைக்கல்வித்திறத்தினாற் கண்டுபிடித்த சமரசவேத சன்மார்க்க சங்கத்தாரே! நும்மார்க்கத்தவராகிய பிள்ளையவர்கள் தம்பாடலுக்கு ஆறுவகுப்பு அல்லது ஆறுபிரிவு அல்லது ஆறுபுத்தகம் அல்லது ஆறுவால்யம் என்று பெயரிடாமல் ஆறுதிருமுறையென்று பெயரிட்டது என்ன நயங் கருதியோ? இது குற்றமன்றெனக்கூறிய நீவிர், வேதாகமமென்பன முறையே அறிதற்கருவியெனவும் ஆப்தவாக்கியமெனவும் பொருடந்துநிற்றலான், பைபிலை வேதாகமமெனக் கூறுதலுங் குற்றமாகாதென்பீர்போலும். அப்படியானாற்சரிதான்.

தேவாரமுதலிய திருமுறைகளை அருட்பாவென்று சொல்லப்படாதென்பதும், இராமலிங்கபிள்ளையவர்கள் பாடலை அருட்பாவென்று சொல்லவேண்டுமென்பதும், திரு

முறையெனவகுத்தது சரியென்பதும், அபயகுலசேகரசோழமகாராசாகாலத்தில் இராமலிங்கபிள்ளையவர்கள் பாடலிருந்தால் பன்னிரண்டு திருமுறைகளோடுசேர்த்துப் பதினெட்டுத் திருமுறைகளாக வகுத்து விடுவாரென்பதும் நுமது கொள்கையென்பதை நும்பத்திரங்களால் வெள்ளிடைமலைபோற்றெள்ளிதிற் புலப்படுத்திவிட்டீர்கள். இக்கொள்கையுடைய நீவிர்தாமா திருமுறைகளை நிந்தியாது போற்றியொழுகு மியல்பினீர்? நன்று! நன்று!! நும் பொய்யுரையினுல் அறிஞர் மயங்குவாரல்லர். நீவிர் சைவசமய வரம்புகடந்து பொருமைமுதலிய காரணங்களால் திருமுறைகளையும் அவற்றைப் போற்றியொழுகிய ஒழுகுகின்ற மெய்யன்பர்களையும் எவ்வாறு தூஷிப்பினும் அதனுல் அவர்க்கு வருவதோரிழுக்கின்று. சூரியனை உள்ளங்கையான் மறைக்கவல்லீராயின், அவர்கள் மெய்யன்பையும் புகழையும் நும் பொய்யுரைகளான் மறைக்கவல்லீராவீர்.

இராமலிங்கபிள்ளையவர்கள் மாணுக்கரென்று சொல்லிக்கொண்டு, இத்தேவிகோட்டைக்கு வந்தவர்களுட் சிலர், திருநாவுக்கரசரைக் கல்லோடுசேர்த்துக்கட்டிக் கடலிற்போட்டதைக் கண்டதார்? அவர் கல்லேமிதப்பாய்க் கரையேறினதைக் கண்டதார்? எங்கள் இராமலிங்கசுவாமிகள் தண்ணீரால் விளக்கெரித்ததையும், ஒரு படகிலேறிப்போகும்பொழுது அப்படகு கவிழ அவ்விடத்தில் ஒரு

மண்டபத்தையுண்டாக்கி அதில் ஓர் இடையூறுமின்றி வீற்றிருந்ததையும் நாம் கண்ணாரக்கண்டோமென்று கூறியும், சிலர், இங்குள்ள சிவன்கோவிலிலே சுவாமி உற்சவங்கொண்டருளும்பொழுது தேவாரத்திருக்கூட்டத்தினுள்ளே நுழைந்து இராமலிங்கபிள்ளையவர்கள் பாடலைச்சொல்ல ஆரம்பித்தபோது அதைநிறுத்தித் தேவாரம் சொல்லுகவென்று ஒருவர் கூறத் தேவாரத்தினும் பார்க்க எங்கள் சுவாமிகள்பாடல் மிக விசேடமுடையதென்றும், எல்லார் மனத்தையும் உருக்குவதென்றும் கூறியும், சிலர், தங்களுக்கு இராமலிங்கசுவாமிகளருளால் இரசவாதந் தெரியுமென்று கூறியும், சிலர், எங்கள் சுவாமிகள் இறந்துவிட்டார்கள் என்று பலர் நினைக்கின்றார்கள் அவர்கள் இறக்கவில்லை; இன்னுஞ் சிலகாலங்கழித்துவருவார்கள் என்று கூறியும் வஞ்சிக்கமுயன்றமையால் தாம் எண்ணிவந்தகருமமும் முற்றுப்பெறாமல் இவ்விடத்தினின்றும் துரத்தப்பட்டார்கள்.

இவர்கள் செய்த சிவனடியார் நிந்தை திருமுறை நிந்தை முதலியவற்றை நேரிற்பார்த்து நன்றாக அறிந்திருந்தேமாகலான் மருட்பாமறுப்பு ஏதுவாக நீங்கள் தொடுத்த வழக்கின்பொருட்டுத் திருமுறையைப் போற்றியொழுகுவோர்க்கு நாம் உதவிசெய்தேமன்றி அருட்பாவல்லாததை அருட்பாவெனக் கொண்டநும்மைப்போல அறியாமையாற் செய்தேமன்று.

நீவிர் எம்மைச் செட்டிகளென்று எழுதிவிட்டால் அதற்கு நாணி நாங்கள் உண்மையென்று கைக்கொண்ட தருமங்களை விட்டுவிடுவோமென்று சொப்பனத்திலுங் கருதவேண்டாம். நீவிர் என்ன சாமானியர்களா? திருமுறைகளை விட்டீர்களா? திருநாவுக்கரசுசுவாமிகளை விட்டீர்களா? நாவலரவர்களை விட்டீர்களா? எங்களை விடுவீர்களா? இன்னும் விடாதீர்! விடாதீர்!! நும் கருத்திற் கட்டிவைத்திருக்குந் தூஷண மூட்டைகளை அவிழ்த்துக் கொட்டிவிடுங்கள் அவற்றை நாம் மலர்மாரிபோற் கொள்ளுதற்கு எதிர்பார்த்திருக்கின்றேம்.

நும்மைச் சமரசவேத சன்மார்க்கசங்கத்தாரென்று கூறுகின்றீர்கள். அங்ஙனங் கூறுதற்கியைந்த செய்கை ஒரு சிறிதும் நும்பால் இல்லையென்பது நுமது பத்திரிகைகளை வாசிப்போர்க்கு இனிது விளங்கும். ஆகலான், நீவிர் எவ்வாறெழுதினும்அதனை ஒருபொருளாக யாம்மதிப்பேமல்லேம்.

திருவாவடுதுறை யாதீனத்தில் முன்னரெழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ. அம்பலவாணதேசிகசுவாமிகளும், ஸ்ரீலஸ்ரீ. சுப்பிரமணியதேசிகசுவாமிகளும், திருவண்ணுமலையாதீனத்தில் முன்னெழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுகதேசிகசுவாமிகளும், மதுரையாதீனத்தில் முன்னெழுந்தருளியிருந்த ஸ்ரீலஸ்ரீ. திருஞானசம்பந்ததேசிகசுவாமிகளும் தங்கள் மடாலயங்களிலே நாவலரவர்களைக் கொண்டு வெகுசனசமூகத்

திலே சைவப்பிரசங்கஞ்செய்வித்து அவர்களை உபசரித்த வரிசைகளை அறியாதார்யாவர்? அச்சுவாமிகளுள்ளே திருவண்ணுமலை யாதீனத்துச் சுவாமிகள் நாவலரவர்களைப் பல்லக்கிலேற்றி வாணத்தடி கோணத்தடி முதலிய விருது களுடனே நகர்வலஞ்செய்வித்து, அப்பல்லக்கிலேயே சகல விருதுகளோடுஞ் சிதம்பரத்துக்கு அனுப்பிவைத்த மகா விசேஷமரியாதையை நீவிர் அறிந்திலீர்போலும். அப்பல்ல க்கு இன்றும் சிதம்பரத்திலே நாவலரவர்கள் மடத்தில் இருக்கின்றது. சங்கத்தாரே! நுமக்கு அவ்விஷயத்திற்சந்தே கமிருந்தால் சிதம்பரத்துக்குப்போய்ப் பார்த்துத் தெளிந்து கொள்ளும்படி உங்களைமிகவும் வேண்டிக்கொள்ளுகின்றேம்.

நாவலரவர்களது சைவாகம உணர்ச்சியையும், சிவப த்தி சிவனடியார்பத்தியையும், அவர்கள் சைவசமயத்தைப் பரப்புதற்காகச் செய்த நற்பெருமுயற்சிகளையும்மேலே சுட் டப்பட்ட சுவாமிகள் மாத்திரமோ பாராட்டினுர்கள்? கிறி ஸ்துமதாசாரியர்களாகிய பாதிரிமார்களும் இங்கிலண்டுவரை பாராட்டியிருக்கின்றுர்கள். எங்ஙனமெனிற் கூறுதும்:—

பாதிரிமார்கள் இங்கிலாண்டிலுள்ள தங்கள் மூலசபை யாருக்கு எழுதிய வருஷாந்த ரிப்போர்ட்டொன்றில் நாவ லராகிய சிங்கம் இங்கிருக்கும்வரையும் பாதிரிமார்களாகிய யானைகளின் செயல்கள் பயன்படாவாம் என்று வரைந்த

மையும், மற்றோர் புஸ்தகவாயிலாக அவர்கள்செய்த பிரசங்கமுதலியவற்றை வியந்து பேசினமையுமாம்.

இங்ஙனமே இங்கிலாண்டுவரையும் புகழ்ப்பெற்றுச் சைவசமயத்தைப் பரப்புதலாகிய உத்தம சிவபுண்ணியமியற்றிய சைவபக்த சிரோமணியாகிய நாவலரவர்களை வாயில்வந்தபடி தூஷித்துப் பொய்மொழி புகல்வோர் நல்லவர்களாம். இராமலிங்கபிள்ளையவர்கள் தாம்பாடிய பாடல்களுக்கு அருட்பாவெனப் பெயரிட்டதும், முறைகள் வகுத்ததும் சைவ சம்பிரதாயத்துக்கு முழுதும் விரோதமென்றும், சிவத்துரோகமென்றுங்கூறிக் கண்டிப்பவர்கள் கெட்டவர்களாம். இங்ஙனம் குணத்தைக் குற்றமென்றும் குற்றத்தைக் குணமென்றுங் கூறி நிரயத்துக்கு ஆளாவோர்க்குக் குணங்கொளுவ யாவரான்முடியும்?

தழங்குரன்முரசிற்சாற்றித் தத்துவந்தழுவல்வேண்டிச்
செழுங்களியாளர்முன்ன ரிருளறச்செப்பினலு
முழங்கழனரகின்மூழ்கு முயற்சியராகின்ற
கொழுங்களியுணர்வினரைக் குணவதங்கொளுத்தலாமோ.

நாவலரவர்களுடைய பிரசங்கவாயிலாகவும், புத்தகவாயிலாகவும், வித்தியாசாலைவாயிலாகவும், சைவசமயபரிபாலனம் நடந்தமையையும், நடக்கின்றமையையும், உலகத்தில் அறியாதார் யாவர்? சமரசவேத சன்மார்க்க சங்கத்தாராகிய நீவிரறியாதது பேராச்சரியமே. அவர்

களுக்கும் இராமலிங்கபிள்ளையவர்களுக்கும் நடந்த வாத முதலியன வற்றை நாங்கள் நன்குணர்வேம். அக்கால முதல் இக்காலம்வரையும் இருதிறத்தாரும் அச்சிட்டுவெ ளிப்படுத்திய பத்திரிகைகளெல்லாம் எங்கள் நகரங்களிலும் பரந்துகிடக்கின்றன. அவற்றுட் போலியருட்பாமறுப்பை யும், இராமசாமிபிள்ளையவர்கள் நாவலரவர்களுக்கு எழுதிய கடிதத்திற் காணப்பட்ட விஷயங்களையும், திராவிடப்பிர காசிகையிற் காணப்பட்ட "முக்குணவசத்தரான தமிழ்ப்பு லவர்பாக்க டருவருட்பாவுந் திருமுறையுமாகாமை நிரூபித் தல்" என்னும் விஷயத்தையும், மருட்பாமறுப்பையும் இந் நாள்காறும் நியாயவாயிலாக மறுத்தார் யாருமிலர். விஷயத் தை விடுத்து மனிதரைத்தூஷித்தலும், தேயத்தைத்தூஷி த்தலும், விடயமறுப்பாமெனக் கருதி மகிழ்ச்சியடையும் மதியிலாரைத்தேற்றுவார் யார்? "காணுதாற் காட்டுவான் றான்காணுன்காணுதான், கண்டானுந் தான்கண்ட வாறு.

"முக்குணவயத்தின் முறைமறந்தறைதல்" என்னும் பத்திரிகையையும்புரட்டப்பார்க்கின்றீர்கள். அது நும்மால் எக்காலத்தும்முடியாது. அப்பத்திரிகை சோழநாட்டிலுதித் த ஸ்ரீலஸ்ரீ உதயமூர்த்திதேசிக சுவாமிகளால் எழுதப்பட்டு எமது பாண்டிநாட்டிலுள்ள பாதரக்குடி பி, ஏ. ஸ்ரீமத் சொ க்கலிங்கபிள்ளையவர்களால், 1872-ஞ பிப்பரவரிமீ சென் னபட்டினம் வர்த்தமானதரங்கிணி அச்சுக்கூடத்திற் பதிப்பி

த்து எங்கும் பரப்பப்பட்டது. எங்களிடத்தில் இன்னும் அப்பத்திரிகையிருக்கின்றது. சந்தேகப்பட்டோர் தேவிகோட்டைக்கு வந்து அதனைப் பார்த்து ஐயந்தீர்ந்துகொள்ளலாம். உதயமூர்த்திதேசிகசுவாமிகளும் „சிதம்பரம்த்துக்கு வந்தபோது இராமலிங்கபிள்ளையவர்கட்கு நடந்துவரும் சீரும், சிறப்பும், பெருமையும், புகழுங்கண்டுபொறுமையுற்று" த்தானு அப்பத்திரிகையை எழுதினார்கள்? அவர்கள் எழுதினமைக்குக்காரணம் அப்பத்திரிகையால் யாவருமுணரலாம்.

உங்கள் பொய்மொழிகளை மெய்மொழிகளெனக்கருதி உண்மையறியாதார் மயங்குவராகலின் அவர்மயக்கம் நீக்குதற்பொருட்டு அப்பத்திரிகையையும் அச்சிடுவித்து இதனோடுசேர்த்திருக்கின்றேம்.

நீவிர் பொறாமை முதலிய காரணங்களால் அச்சிட்டுவெளிப்படுத்திய திருமுறை நிந்தை சிவனடியார் நிந்தைகளைச் சகிக்கமுடியாமல் இதனைச் சுருக்கமாயெழுதி அச்சுவித்து வெளிப்படுத்தினேமன்றிப் பிறிதுகாரணம் பற்றியன்றென்பது "சமஞ்செய்து சீர்தூக்குங்கோல்போ லமைந்தொருபாற் கோடாமை" யைத் தமக்கு அணிகலமாகவுடைய சான்றோர் வாசிக்கும்போது அறிந்துகொள்வார்கள். நீவிர் எங்ஙனங் கருதினுமென்?

நாம் பிரதானமாய்க் கவனிக்கவேண்டிய விஷயங்க

ளேக் கவனித்து அவைகள் தவறென்பதை விளக்கிச் சமரசவேத சன்மார்க்க சங்கத்தார், தாமும், தம்மைச்சார்ந்தோரும் தேவார திருவாசகமுதலிய திருமுறைகளை ஒப்புயர்வில்லாதனவாகக்கைக்கொண்டு போற்றியொழுகும் நீரரெனக்கூறியது பொய்யென்பதை அவர்கள் வாக்கைக் கொண்டே பசுமரத்தாணிபோற் பதித்து நாட்டினும். ஏனைவிஷயங்களைக்கவனிக்க விருப்பமிருந்தால் ஈழநாட்டாருஞ் சோழநாட்டாருங் கவனிக்கக் கடவர்கள்.

சான்றோரே!

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.

பித்தனென்றும் பேயனென்றும் பேய்வனத்தி லாடியென்று
மெத்தனைபே ரீசனையு மேசினு—ரத்தனையு
மென்மார்க்க மாயிற்றென் றெண்ணாத தென்னையோ
சன்மார்க்க சங்கத்தார் தாம்.

முற்றிற்று.

---

விசுவாவசு ஹு
வைகாசி மீ
தேவிகோட்டை.

இங்ஙனம்,
☞ நகரத்தார்.

சிவமயம்.

வீரகத்திவிநாயகன்றுணை.

# முக்குண வயத்தின் முறைமறந் தறைதல்.



ஸ்ரீ யாழைப்பழித்த மொழியம்மைசமேத வேதாரணியேச்சுரப்பெருமானது திருவருளை முன்னிட்டு, உலகின்கணுள்ள அன்பர்களுக்கு உபகாரார்த்தம் தெரிவிக்கும் விண்ணப்பம்.

ஐயன்மீர்!

சென்னபட்டினம் இராசதானியைச்சேர்ந்த வட்லூர்மேட்டுக்குப்பத்தில் வசிக்கும் கருங்குழிக் கணக்கர் ம-ா-ா-ஸ்ரீ, இராமலிங்கபிள்ளை அவர்கள் "அற்புதப்பத்திரிகை" என்று ஒரு விளம்பரம் இட்டார். அதனை அவரது சிஷ்யர்களுள் கன்டிராக்டர் ஆறுமுகமுதலியார் என்பவரும், ஆடூர் சபாபதிசிவாசாரியர் என்பவரும் ஊரூர்கடோறும் கொடுத்துவந்தார்கள். இராமலிங்கபிள்ளையின் பெரும்புளுகுகளெல்லாவற்றையும் உண்மையென்று பலர் நம்பி

னர். தஞ்சாவூர் ஜில்லா திருத்துறைப்பூண்டித் தாலுக்காவில் இருந்த சைவரான எமது சிஷ்யர் ஒருவர் இறந்தார். அவரது மனைவி அறியாமையாலும், தனது கணவனைப் பெறவேண்டுமென்ற அவாவினாலும் பத்திரிகை கொடுத்து வந்த இராமலிங்கபிள்ளை சீடர்க்கு அறிவிக்க, அவர் சுவாமிகள் எழுப்பிக்கொடுப்பார்; நீ கொண்டுவரலாமென்று சொன்னார்கள். அவள் அவ்வாறே வடலூர்க்குக் கொண்டுபோக வெளிப்பட்டபோது, அவள் இனத்தவராய முத்துச்சாமிப்பண்டாரம், பூ. சுந்தரபண்டாரம், வேதாசலபண்டாரம் முதலினோர் கொண்டுபோதல் கூடாது என்று மறிக்கவும், அவள் கேளாது எடுப்பித்துக்கொண்டு வடலூர்க்குப் போய்ச்சேர்ந்தாள். இராமலிங்கபிள்ளை எழுப்பித்தருவேமென்று சொல்லப் புதைத்தனள். உறவினர் வந்து அபரக்கிரியை செய்யும்படி எம்மைக் கேட்டகாலை யாம் தகனஞ்செய்யாத உயிருக்குச் செய்யமாட்டேம் என்றுகூற, கணவன் செத்ததின் பின்னுங் கிரியை செய்யாமல் தாலிகட்டியிருக்கும்படி இராமலிங்கபிள்ளை சொன்னமையால் அவன் மனைவி அங்கு அவ்வண்ணம் இருக்கின்றாள். அவளை அழைத்தாலும் வரமாட்டேனென்கிறாள். எதுவித்தும் அவளையழைத்துத்தந்து கிரியைகளையும் முடிக்கவேண்டுமென்றனர். பிள்ளை பெண்களையும் மயக்க மாயப்பொடி வைத்திருப்பார்போலும் என்று அவர்க்குச் சொல்லி வடலூர்க்கு வந்தேம்.

அங்கே மேட்டுக்குப்பம்போனபோது அநேக கைம்மைப்பெண்கள் தமது புருஷர்களை எழுப்புவித்தற்காகக் கூடியிருந்து சுமங்கலிகளைப்போல குங்குமம், மஞ்சள், தாலி, நகை இவைதரித்து இருந்தனர். சைவத்திற்கு மாறாக அக்கூட்டங்காணப்பட்டமையால் உலகாயதக் கூட்டமாக விளங்கிற்று. அவ்வுலகாயதக் கூட்டமாகிய பெண்கள் கூட்டம் புடைசூழ இராமலிங்கபிள்ளை உலகாயதமதப் பிரபுவாகக் காணப்பட்டார். சைவராயிருந்தால் அத்தகைய மாறுபாடான செய்கைகளைச் செய்யவும் செய்விக்கவும் சம்மதிப்பாரோ? ஐயோ! பாவம்! பாவம்! அங்கே புடமிடுவதும், மூலிகைகள் துவைப்பதும், அரைப்பதும், காய்ச்சுவதுமாக இருந்தார் சிலர். கன்டிராக்டர் ஆறுமுகமுதலியார் இரண்டொருவரைக் கொண்டு தாம் சென்னையினின்றுங் கொண்டுவந்த இரும்புத்துண்டுகளை அடுக்குவித்தார். இது எதற்கென்று கேட்டேம்; முக்காடு போட்டிருந்த இராமலிங்கபிள்ளை; நீவிர், யாவர்? எங்கிருப்பவர் எனவினவ, யாம் எம்முடைய வரலாறுகளையெல்லாங் கூற, கேட்ட அவர் இரசவாதம் பண்ணுதற்கென்றார். அதன்பின் எமது சிஷ்யன் மனைவியையும் அவள் கொடுத்த பணத்தையும் கொடுத்து அனுப்பவேண்டும். அந்தப் பிணத்தையும் இவ்விடத்திற்றானே கொளுத்துவிக்கின் அபரக் கிரியைகளை முடிப்பேம் என்றேம். அவற்றிற்குச் சிறிதுநேரம் பேசாமல் இருந்தார். யாம் இராமலிங்கபிள்ளை அவர்களே தயை

செய்க என்று சொன்னமாத்திரத்தே, பிள்ளை அவர்கள் குட்டிபோட்ட ஞாளிபோலக் குரைத்துக் கோபித்து இவரை அப்புறப்படுத்துங்களென்றார். எமக்கு அச்சமும் வியப்பும் அதிகரித்து என்னகுற்றஞ் செய்தேனென்று கேட்க, இங்கே பிள்ளையென்ற சொல் கூடாது. திருவருட்பிரகாசவள்ளலார், அல்லது சுவாமிகள் என்று சொல்ல வேண்டும் என்று அவர் தமது சீடர்க்குத் தெரிவித்தபடி அவர்களெனக்குச் சொன்னார்கள்.

யான் ஆச்சரியவசத்தனாய் அற்புதப் பத்திரிகையிலும், தாம் பாடியச்சிடுவித்த புத்தகத்திலும் இராமலிங்கபிள்ளையென்றுதானே போட்டிருக்கிறார். இராமன் என்ற பெயர் இராமலிங்கம் என்று ஆகி, அது இராமலிங்கபிள்ளையாய் மாறியிருந்ததே. அதுவும் ஒரு வருடத்திற்குள் சுவாமிகளாகித் திருவருட்பிரகாசவள்ளலாரானது எமக்குத் தெரியாது. தம்முடைய பெயரைச் சொன்னதற்கு இவ்வளவு கோபஞ்செய்தவர் நாவலர் என்ற சொல்லுக்கு அவகுண அர்த்தம்பண்ணி நாவலரை நிந்தித்ததும், அதற்கு நாவலர் மஞ்சக்குப்பம் கோர்ட்டில் ஜாயின் மாஜிஸ்டிரேட் மெஸ்டர் ராபர்ட் துரையவர்களிடத்தில் வழக்குக்கொண்டுவந்தகாலை, நான் போயிருந்த தவணையாகிய சுக்கில௵ மார்கழிமீ இராமலிங்கபிள்ளை இராமலிங்கபிள்ளை யென்று பலருமறியக் கூப்பிட்டதற்கு என்ன செய்தார். அதில் தம்

மையடித்த பிராமணர்க்கு விதித்த அபராதப் பணத்திற்காகவும் செலவு பணத்திற்காகவும் முட்டுப்பட்டு, எமக்குத் தெரிந்த சைவவேளாளர்களிடம் போய்ப் பணங்கேட்டகாலே அவர்கள், பொய்ச்சத்தியம் செய்த பிள்ளையே! கணக்குப்பிள்ளையே என்று பலமுறை நிந்தித்ததற்குங் கூப்பிட்டதற்கும் என்னசெய்தாரென்றேம். இவற்றைச் சொல்லவே பிள்ளையவர்கள் அஞ்சலிசெய்து அங்ஙனம் சொல்லவேண்டாம் என்று வேண்டிக்கொண்டனர், இதனாலே இவர் குணம் மாறிச்சொல்வோர் என்பது தெரிந்தது. பின்னர்ப் பிள்ளை அவர்களைப் பார்த்து, சுவாமிகாள்! "இறந்தவர் உயிர்பெற்றெழுதல், மூப்பினர் இளமையைப் பெற்று நிற்றல் முதலிய" அற்புதங்களைச் செய்வேமென்று விளம்பரமிட்டீரே. முதலிய என்றதனாற் குறிக்கப்படும் மற்றை அற்புதங்கள் எவை யென்று கேட்டேம். அதற்கு இராமலிங்கபிள்ளை அவர்கள் சொன்னதாவது—பிள்ளையில்லாதவர்க்கு அது பெறுவித்தல், கை, கால், கண், இவையில்லாதவர்க்கு அவைகொடுத்தல், பொன்இல்லாதவர்க்குப் பொன்செய்து கொடுத்தல், நோய் நீக்கல் முதலாயின என்றார். அவைகளுள் ஏதேனும் யார்க்காவது செய்ததுண்டா வென்று கேட்டேம். இனிமேல் நடக்கும் என்றார். எப்போது என்று கேட்டேம். இரண்டரை நாழிக்குளென்றார். அதுவரைக்குமிருந்து நடக்கவில்லையே யென்றேம்.

தேவநாழிகையன்றி மானுடநாழிகையல்ல என்று பின்னர் உத்தரமீந்தார். அங்குநம்பிப் பலநாட் காத்திருந்தவர்கள் சொல்வனவெல்லாம் புளுகு என்று வைதுபோயினர். உடையார்பாளையம் என்னும் ரெட்டிபாளையத்துப் பெண்கள் சிலர் புருடவரம்கேட்க, அவர்க்கு இராமலிங்கபிள்ளை, பிள்ளைவரங்கொடுத்ததுபோலத் திருத்துறைப் பூண்டியினின்றும் போய அவனுக்கும் பிள்ளைவரங்கொடுக்கப்பட்டமையால் ஆகுலித்துத் திரும்பினேம்.

அன்பர்களே பிள்ளையில்லாதவர்க்குப் பிள்ளைவரம் கொடுத்தலாகிய அற்புதத்தை மாத்திரம் பிள்ளையவர்கள் செய்கிறுர். பெண்ணேய்க்காக இரசஞ்சேர்ந்த மருந்தினைப் பரிகாரி கந்தப்பிள்ளை அவர்களிடம் வாங்கியுண்டு அதன் வேகத்தால் விழுந்த தமது பற்களை முளைப்பிக்கப் பண்ணுதவர் செத்தவரை எழுப்பல், நோய்நீக்கல், கை, கால், கண் இவைகளைப் பிறர்க்குக் கொடுத்தல் எப்படி? இரசவாதம் செய்கின்ருரென்று மயங்காதீர். உடையார்பாளையத்தில் ஒருவரைச் சூனியஞ்செய்து கொல்வேனென்று வாக்குப்பண்ணி ஜமீன்தாரரிடம் வாங்கிய தங்கக்காசுகளைக் கடிதத்திற் சுருட்டிச் செம்புருக்குவோர்போல உருக்குவித்து மருந்தென்று விபூதியைத் தூவிச் செம்பு பொன்னுயிற்றென்று காட்டிவருகின்ற கபடநாடகக் கூத்தன்றி வேறில்லை. பணங்கொடுத்தவரிறந்தது பிள்ளையின் நற்காலமே.

இவைகளையெல்லாம் நேரிற் பார்த்து உலகர் துன்பப்படாது எழுதினேமன்றி வேறோர் கோபத்தாலன்று. தகனஞ்செய்தல், உத்தரகிரியை, சிரார்த்தம் முதலியன செய்தல் கூடாதென்கிறார். அவை வேதசிவாகம விதியென்றேம். வேதசிவாகமங்களைக் குப்பையிலெறி; அவை பயனில்லை என்று நிந்தித்த இவர் சைவரா? அருள் பெற்றவராவரா? இவரை யுலகாயதரென்றே சொல்லவேண்டும். இவர் சொற்களைப் பித்தப் பிதற்றென்றே கொள்க.

வேதாரணியம் பிரசோற்பத்திஷு தைமீ } இங்ஙனம் வேதாரணியம், தெற்குவீதி: உதயமூர்த்திதேசிகசுவாமிகள்.

---

இது மதுரை பாதரக்குடி பி-ஏ-சொக்கலிங்கம்பிள்ளை அவர்களால் சென்னபட்டினம் வர்த்தமான தரங்கிணி அச்சுக்கூடத்திற் பதிப்பித்து வெளியிடப்பட்டது. 1872-ஷு பிப்ரவரிமீ.

---

இவ்விரண்டாம் பதிப்பு தேவிகோட்டை நகரத்தாரால் ஷை யூ. மீனலோசனி யந்திரசாலையில் விசுவாவசுஷு வைகாசிமீ பதிப்பிக்கப்பட்டது. 1905ஷு ஜூன்மீ.